[18th August 1961

*Bridge across Agniar*

* 1238 *Q.*—SRI M. K. SOMASUNDARAM (on behalf of SRI R. SRINIVASA IYER) : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ராஜமடம் அருகே முத்துப் பேட்டை மிமிசல் சாலையில் (கிழக்கு கடற்கரை சாலையில்) அக்கினியார் ஆற்றின் குறுக்கே ஒரு பாலத்தை அல்லது ஊடு பாதை ஒன்றை அல்லது ஒடு பாலம் ஒன்றினை அமைக்கும் உத்தேசம் ஏதேனும் உண்டா? என்ன செலவில்?

(இ) இதற்கான மதிப்பீடுகளும், திட்டமும் தயாரிக்கப் பட்டுள்ளனவா?

(உ) எப்போது இந்த வேலை மேற்கொள்ளப்படும்?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) There is a proposal to construct a bridge across Agniar river at mile 12/5 of Muthupet-Mimisal road at a cost of Rs. 4,45,000.

(*b*) Not yet, Sir.

(*c*) Investigation for this work has been taken up. The estimates will be finalized and the work will be put into execution after technical sanction is given to the estimates.

SRI A. VEDARATHNAM : இந்த டெக்னிக்கல் ஸாங்ஷன் முதலியவைகளெல்லாம் கொடுத்து வேலை துவக்க எவ்வளவு காலம் பிடிக்கும் என்று கனம் அமைச்சர் எதிர்பார்க்கிறார்கள்?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : எப்போது வேலை துவங்கும் என்று கூற முடியாது. வேலையை துரிதப்படுத்த முயற்சி எடுத்துக் கொள்ளப்படும்.

*Constitution of Committees (Panchayats)*

* 1239 *Q.*—SRI A. VEDARATHNAM (on behalf of SRI A. R. MARIMUTHU) : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா---

(அ) நம் ராஜ்யத்தில் பஞ்சாயத்து யூனியன்கள் அமைக்கப் பட்ட இடங்களில், கல்வி கமிட்டி, பொதுக் காரியக் கமிட்டி, உற்பத்தி கமிட்டிகள் அமைக்கப்பட்டுள்ளனவா?

(இ) மேற்கண்ட கமிட்டிகள் ஏற்படுத்தும் முறைபற்றி விதிகள் செய்யப்பட்டுள்ளனவா? இல்லையெனில், ஏன்?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) The particulars are being collected by the Government.

(இ) No rules have been issued by the Government regarding the constitution of Committees. The Panchayat Union Councils have been empowered under section 53 of the Madras Panchayats Act, 1958, to constitute Committees. This power may be exercised by Panchayat Union Councils even if no rules are

18th August 1961]

framed by the Government, but if rules are issued the action taken thereon should be in conformity with those rules. The question of issuing rules is under the consideration of the Government.

**Sri R. KRISHNASAMI NAIDU :** பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில்களிலும், ஜில்லா அபிவிருத்தி கவுன்ஸில்களிலும் ஒருவர் ஒரு கமிட்டிக்கு மேல் அதிகமாக அங்கம் வகிக்க முடியாது என்ற ஏற்பாடு இருக்கிறது. ஜில்லா அளவில் இருக்கக்கூடிய ஜில்லா அபிவிருத்தி கவுன்ஸில்களின் கமிட்டிகள் சம்பந்தப்பட்ட வரையில் இது பொருத்தமாக இருக்கலாம். பல்வேறு கமிட்டிகளில் அங்கம் வகிக்க வேண்டிய அளவு தகுதி பெற்றவர்கள் இருப்பார்கள். ஆனால் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் சம்பந்தப்பட்ட வரையில் 50,000 அல்லது 60,000 ஜனத்தொகை இருக்கக்கூடிய இடங்களில் நல்ல அனுபவம் வாய்ந்தவர்களின் ஆலோசனை கிடைக்க முடியாது, ஒரு கமிட்டிக்கு மேல் அதிகமாக அங்கம் வகிக்க முடியாது என்ற விதி இருப்பதன் காரணமாக. ஆகையால், இதைப் பற்றி அரசாங்கம் கவனம் செலுத்தி ஆவன செய்வார்களா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** சட்டத்திலேயே இந்த மாதிரி போட்டிருப்பதாக எனக்கு ஞாபகம். இதில் ஏதாவது கஷ்டம் இருக்கிறது என்றால் சட்டத்திற்குத் திருத்தம்தான் செய்ய வேண்டும். இன்னும் சிறிது நாட்களுக்குப் பிறகு, நிலைமையைப் பரிசிலனை செய்து, அவசியமிருந்தால் சட்டத்தைத் திருத்தலாம்.

**SRI S. M. ANNAMALAI :** ஸார், இந்தச் சட்டம் 1958-ம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட சட்டம். இந்தச் சட்டத்திற்கு இது வரையில் சரியான விதிகள் பிறப்பிக்கப்படவில்லை. இதில் கால தாமதம் ஏற்படக் காரணம் என்ன ? விதிகள் இல்லாத காரணத்தினால் பல குழப்பங்கள் உண்டாகின்றன. அவைகளைத் தவிர்க்க சர்க்கார் எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கை என்ன ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இது கமிட்டிகள் நியமிப்பதைப் பற்றியது. பல பஞ்சாயத்து யூனியன்களில் இது வரையில் கமிட்டிகளை நியமித்திருக்கிறார்கள். இதில் எந்த மாதிரிக் கோளாறும் ஏற்படவில்லை. கோளாறு ஏற்படும் இடங்களில் ரூல் இருந்தாலும் ஏற்படும். ரூல் இல்லாததால் தான் என்பது இல்லை. பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில்களெல்லாம் ஒற்றுமையாகக் காரியங்களைச் செய்யும் பழக்கத்தை ஏற்படுத்த வேண்டுமே தவிர, எதுவும் சட்டத்தால் மட்டும் முடியாது.

**SRI S. PAKKIRISAMI PILLAI :** இந்த பஞ்சாயத்து கமிட்டிகளுக்கு வரும் அங்கத்தினர்களுக்கு ஸிட்டிங் ஃபீஸ் ஐந்து அல்லது பத்து ரூபாய் கொடுக்கலாம் என்ற யோசனை இருந்ததே அப்படி இப்போது கொடுக்கப்பட்டு வருகிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை. இதைப் பற்றித் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.